පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

08.08.2019 / 0830 - 1030

ව්‍යාපාර අධ්‍යයනය I
வணிகக் கல்வி I
Business Studies I

32 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள்:**

* **எல்லா** வினாக்களுக்கும் **இவ்வினாத்தாளிலேயே** விடை எழுதுக.
* மேலே தரப்பட்டுள்ள இடைவெளியில் உமது **சுட்டெண்ணை** தெளிவாக எழுதுக.
* **1** தொடக்கம் **30** வரையுள்ள வினாக்களுக்கு சரியான விடையைத் தெரிவுசெய்து, அதன் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள புள்ளிக்கோட்டின் மீது எழுதுக.
* **31** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்களுக்குச் சுருக்கமான விடைகளைத் தரப்பட்டுள்ள புள்ளிக்கோட்டின் மீது எழுதுக.
* ஒவ்வொரு வினாவுக்கும் **இரண்டு** புள்ளிகள் உரித்தாகும்.

**சுட்டெண் :** ................................

**பரீட்சகரின் உபயோகத்திற்கு மட்டும்**

| வினாத்தாள் I | |
|---|---|
| **வினா இல.** | **புள்ளிகள்** |
| **1 - 30** | |
| **31 - 50** | |
| **மொத்தம்** | |

| | கையொப்பம் | குறியீட்டு இல. |
|---|---|---|
| 1 வது பரீட்சகர் | | |
| 2 வது பரீட்சகர் | | |
| மேலதிக பிரதம பரீட்சகர் | | |
| பிரதம பரீட்சகர் | | |
| எண்கணிதப் பரிசோதகர் | | |

**1.** பின்வருவன மனித தேவைகள், விருப்பங்களின் சில குணாதிசயங்களாகும்.

A - வரையறுக்கப்பட்டது
B - விருப்பத்தை அடிப்படையாகக் கொண்டது
C - பொதுவானது
D - காலத்துக்கேற்ப மாற்றமடையக் கூடியது
E - உருவாக்கக்கூடியது
F - அத்தியாவசியமானது
G - நீண்ட காலத்தைக் கொண்டது

மேற்குறித்தவற்றுள் தேவைகளின் பண்புகளை மாத்திரம் கொண்ட தெரிவு யாது?

(1) A, C, F, G (2) A, D, F, G (3) B, D, E, F
(4) C, D, F, G (5) C, D, E, F (……)

**2.** சமூக கலாசாரச் சூழலுக்கு உரித்தான அடிப்படை அம்சங்களைச் சரியாக உள்ளடக்கியுள்ள தெரிவு யாது?

(1) நம்பிக்கைகள், விழுமியங்கள், தொழில்நுட்பம், நியமங்கள்
(2) விழுமியங்கள், நிறுவனங்கள், வயதுக்கட்டமைப்புகள், பாரம்பரியங்கள்
(3) பழக்கவழக்கங்கள், விழுமியங்கள், நிறுவனக் கட்டமைப்பு, பாரம்பரியங்கள்
(4) நம்பிக்கைகள், விழுமியங்கள், பழக்கவழக்கங்கள், ஒழுங்குவிதிகள்
(5) நம்பிக்கைகள், விழுமியங்கள், பழக்கவழக்கங்கள், பாரம்பரியங்கள் (……)

**3.** பின்வருவன பொருட்கள், சேவைகளின் தனித்துவமான சில பண்புகளாகும்.

A - வேறுபடுத்தும் தன்மை
B - பிரிக்கமுடியாதது
C - களஞ்சியப்படுத்தக்கூடியது
D - திருப்பியனுப்பக்கூடியது
E - தொட்டுணரமுடியாதது
F - அழியக்கூடியது

மேற்குறித்தவற்றுள் சேவைகளின் குணாம்சங்களை மாத்திரம் கொண்ட தெரிவு யாது?

(1) A, B, D, F (2) A, B, E, F (3) B, C, D, E (4) B, C, E, F (5) C, D, E, F (……)

**4.** முகாமையாளர் ஒருவர், “வணிகத்திற்கான சாதாரண இலாபத்தினை உழைக்கின்ற அதேவேளையில் நிறுவனத்திற்கு அருகாமையில் வசிப்பவர்களின் வாழ்க்கைத் தரத்தினை உயர்த்துவதும் தன்னுடைய பொறுப்பாகும்” எனக் குறிப்பிடுகின்றார். இக் கூற்றின்படி மிகச் சிறப்பாக எடுத்துக்காட்டப்படும் நிறுவனத்தின் பொறுப்புக்கூறத்தக்க தரப்பினர்

(1) சமூகமும் வாடிக்கையாளர்களும் ஆவர்.
(2) உரிமையாளர்களும் ஊழியர்களும் ஆவர்.
(3) உரிமையாளர்களும் சமூகமும் ஆகும்.
(4) உரிமையாளர்களும் வாடிக்கையாளர்களும் ஆவர்.
(5) உரிமையாளர்களும் அரசாங்கமும் ஆகும். (……)

[ பக் 2 ஐப் பார்க்க

5. குறித்தவொரு பொருளின் காலாவதியாகும் திகதி குறிப்பிடப்படாதிருப்பதன் மூலம் மீறப்படும் நுகர்வோர் உரிமை யாது?
(1) அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குள்ள உரிமை
(2) தெரிவு செய்வதற்கான உரிமை
(3) தகவல் அறிந்துகொள்வதற்கான உரிமை
(4) நுகர்வோர் கல்விக்கான உரிமை
(5) பாதுகாப்பாக இருப்பதற்கான உரிமை (......)

6. பின்வரும் அட்டவணையில் கம்பனிகளின் வகைகளும் அவற்றின் சில குணாம்சங்களும் தரப்பட்டுள்ளன.

| கம்பனிகளின் வகைகள் | குணாம்சங்கள் |
|---|---|
| (i) வரையறுக்கப்பட்ட தனியார் கம்பனிகள் | A - பகிரங்கமாக பங்குகளையும் கடன் பத்திரங்களையும் வழங்கக்கூடியதாயிருத்தல் |
| (ii) வரையறுக்கப்பட்ட பொதுக் கம்பனிகள் | B - இலங்கையில் பதிவுசெய்யப்பட்டு கடல்கடந்து மாத்திரம் வணிக நடவடிக்கைகளில் ஈடுபடுதல் |
| (iii) உத்தரவாதத்தால் வரையறுக்கப்பட்ட கம்பனிகள் | C - பங்குதாரர்களின் பொறுப்புக்கள் வரையறுக்கப்படாமை |
| (iv) வரையறுக்கப்படாத கம்பனிகள் | D - இலாபம் பகிர்ந்தளிக்கப்படாமை |
| (v) கரைகடந்த கம்பனிகள் | E - பகிரங்கமாக பங்குகளையும் கடன்பத்திரங்களையும் வழங்க முடியாமை |

மேற்குறித்த கம்பனிகளின் வகைகளுக்கமைய அவற்றின் குணாம்சங்கள் சரியாகப் பொருந்தும் வகையில் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள தெரிவு யாது?
(1) C, A, D, E, B (2) C, D, A, B, E (3) D, E, B, C, A
(4) E, A, D, C, B (5) E, C, D, A, B (......)

7. பின்வருவன வணிகங்களுக்குரிய சில குணாம்சங்கள் ஆகும்.
A - குறைந்தளவான சட்ட நடைமுறைகளின் தேவைப்பாடு
B - தொடர்ச்சியாக நிலைத்திருத்தல்
C - வரையறுக்கப்படாத பொறுப்புகள்
D - பரஸ்பர இணக்கப்பாடு
E - வணிகத்தின் பெயரில் வரி செலுத்துதல்
மேற்குறித்தவற்றுள் பங்குடைமையொன்றின் குணாம்சங்களை மாத்திரம் உள்ளடக்கிய தெரிவு யாது?
(1) A, B, E (2) A, C, D (3) B, C, D (4) B, D, E (5) C, D, E (......)

8. காயத்திரி என்பவர், தமது பிரதேசத்தில் விளையாட்டு நிகழ்வுகளை ஒழுங்கமைக்கும் நிறுவனமொன்று இல்லாமை காரணமாக விளையாட்டுக் கற்கைநெறியொன்றை நிறைவுசெய்த பின்னர், தனது நண்பரிடமிருந்து கடனாகப் பெற்றுக்கொண்ட ரூபா 25 000 ஐ முதலீடு செய்து விளையாட்டு நிகழ்வுகளை ஒழுங்கமைக்கும் நிறுவனமொன்றை ஆரம்பித்தார். இத் தகவல்களுக்கமைய காயத்திரியிடம் காணப்படுகின்ற முயற்சியாண்மைத் தேர்ச்சிகளின் எண்ணிக்கை
(1) 1 (2) 2 (3) 3 (4) 4 (5) 5 (......)

9. அலகுப் பொறுப்பாட்சிகளில் முதலிடுவதன் மூலமாக முதலீட்டாளருக்குக் கிடைக்கும் அனுகூலமாவது,
(1) முதலீட்டின் மீதான அதிக வருவாய்
(2) அலகுப் பொறுப்பாட்சி முகாமைத்துவத்தில் பங்குபற்றக்கூடிய தன்மை
(3) உபகாரப் பங்குகளைப் பெறக்கூடிய உரித்துரிமை
(4) முதலிடப்பட்ட பணத்தை எவ்வித தண்டப்பணமும் இன்றி எந்தவொரு சந்தர்ப்பத்திலும் மீளப்பெறக்கூடிய தன்மை
(5) முதலீட்டு வருவாய்க்கெதிரான வருமானவரியைச் செலுத்த வேண்டியதில்லை. (......)

10. காசோலை குறுக்குக் கோடிடலுடன் தொடர்புடைய சரியான கூற்று யாது?
(1) குறுக்குக் கோடிடப்படாத காசோலையில் பெறுநர் குறுக்குக் கோடிட முடியும்.
(2) பெறுநரினால், தமது கையொப்பத்தினை இட்டு காசோலையிலுள்ள குறுக்குக் கோடிடலை இரத்துச் செய்ய முடியும்.
(3) குறுக்குக் கோடிடப்பட்ட சகல காசோலைகளையும் புறக்குறிப்பிடுவதனூடாக வேறொருவருக்குச் சாட்டுதல் செய்யமுடியும்.
(4) குறுக்குக் கோடிடப்பட்ட சகல காசோலைகளையும் வங்கிக் கருமபீடங்களில் சமர்ப்பித்து காசாக்கிக் கொள்ள முடியும்.
(5) பணக் காசோலைகளைக் (cash cheque) குறுக்குக் கோடிட முடியாது. (......)

11. மதுரா A, B எனும் காப்புறுதிக் கம்பனிகளில் முறையே ரூபா 300 000, ரூபா 400 000 ஆகிய பெறுமதிகளில் ஆயுள் காப்புறுதி ஒப்பந்தங்கள் இரண்டினைப் பெற்றுக்கொண்டு காப்புறுதித் தவணைப் பணத்தை முறையாகச் செலுத்தியுள்ளார். காப்பீட்டுக் காலத்தினுள் மதுரா மரணமடைவாராயின், கிடைக்கக்கூடிய இழப்பீட்டுத் தொகை
(1) ரூபா 300 000 (2) ரூபா 350 000 (3) ரூபா 400 000
(4) ரூபா 700 000 (5) இழப்பீட்டினைக் கோருவதற்கு உரித்தில்லை (......)

12. போக்குவரத்தின் அடிப்படை அம்சங்களைச் சரியாக உள்ளடக்கியுள்ள தெரிவு யாது?
(1) ஊடகம், வலு, வழி, தரிப்பிடம் (2) ஊடகம், வலு, கிரயம், வேகம்
(3) ஊடகம், தரிப்பிடம், கிரயம், வேகம் (4) ஊடகம், வலு, வழி, வேகம்
(5) கொள்ளளவு, வழி, தரிப்பிடம், வலு (......)

13. மனிதவள முகாமையாளரொருவர், தொழில் வெற்றிடமொன்று தொடர்பான பத்திரிகை விளம்பரமொன்றைத் தயாரிக்குமாறு தனது நிறைவேற்று அதிகாரிக்கு மின்னஞ்சலூடாக அறிவித்திருந்தார்.
மேலே தொடர்பாடல் நிகழ்ந்த வழிமுறையினைச் சரியாகக் குறிப்பிடும் தெரிவு யாது?
(1) கிடையான - முறைசார் (2) மேலிருந்து கீழான - முறைசார்
(3) கீழிருந்து மேலான - முறைசார் (4) மேலிருந்து கீழான - முறைசாரா
(5) நிலைக்குத்தான - முறைசாரா (......)

14. 'சிறப்பு அங்காடி' என்பதனை மிகச்சரியாக வரையறுக்கின்ற கூற்று யாது?
(1) சுயசேவை அடிப்படையில் அத்தியாவசிய, வசதிப்பொருட்களின் சில்லறை விற்பனையில் ஈடுபடும் ஒரு வர்த்தக நிலையமாகும்.
(2) தனியொரு உற்பத்தியாளரின் பொருட்களை விநியோகம் செய்வதற்காக நாடு முழுவதும் கிளைகளைக் கொண்டதொரு வர்த்தக நிலையமாகும்.
(3) தனியொரு உற்பத்தியாளரின் பொருட்களை மாத்திரம் விற்பனை செய்வதற்கு இணங்கியுள்ளதொரு வர்த்தக நிலையமாகும்.
(4) ஒரே கட்டடத்தில் ஒவ்வொரு வகைப் பொருளுக்குமென வெவ்வேறு பகுதிகளைப் பராமரிக்கும் ஒரு வர்த்தக நிலையமாகும்.
(5) பெருந்தொகையான பொருட்களைக் களஞ்சியப்படுத்தி வைத்திருந்து அவற்றின் மொத்த விற்பனையில் ஈடுபடும் ஒரு வர்த்தக நிலையமாகும். (......)

15. ஆடை உற்பத்தி நிறுவனமொன்றில் வடிவமைப்பு, புடைவை வெட்டுதல், புடைவை தைத்தல், சோதனையிடல், பொதியிடல் ஆகியவற்றுக்காக திணைக்களங்கள் தாபிக்கப்பட்டுள்ளன. இத்திணைக்களப்படுத்தலின் அடிப்படை யாது?
(1) செயன்முறை (2) தொழிற்பாடு (3) உற்பத்திப்பொருள்
(4) கலவை (5) வாடிக்கையாளர் (......)

16. இலத்திரனியல் வணிகம் தொடர்பில் **தவறான** கூற்றினைத் தெரிவுசெய்க.
(1) விரைவான கொடுக்கல் வாங்கல் இடம்பெறல்
(2) தெரிவுசெய்யக் கூடியதாயிருத்தல்
(3) விலை ஒப்பீட்டினை மேற்கொள்ளக்கூடியதாயிருத்தல்
(4) கட்டளைக்காலம் குறைவடைதல்
(5) பொருட்களைத் திருப்பியனுப்புதல் இலகுவாதல் (......)

17. இலங்கை மத்திய வங்கியினால் பயன்படுத்தப்படும் தரரீதியான கடன் கட்டுப்பாட்டு நுட்பமுறையாக அமைவது
(1) கடன்களுக்கான உச்ச முதிர்வுக் காலத்தைத் தீர்மானித்தல
(2) வர்த்தக வங்கிகளுக்கு வழங்கும் கடன்களுக்கான வட்டி வீதத்தை அதிகரித்தல்
(3) நாணயக்கடிதத்தினை வழங்கும்போது குறைந்தபட்ச வைப்புத் தொகையினைத் தீர்மானித்தல்
(4) வர்த்தக வங்கிகளால் கடன் வழங்கப்படும் துறைகளை மட்டுப்படுத்துதல்
(5) கடன்களுக்கான உச்ச வரம்பினைத் தீர்மானித்தல் (......)

18. நுகர்வோர் ஒருவரால் புதியதொரு உற்பத்தி பற்றிய சிந்தனை உற்பத்தியாளரொருவரின் இணையப் பக்கத்தில் ஆலோசனையாகப் பதிவிடப்பட்டது. உற்பத்தியாளர் அக்குறித்த சிந்தனையை அடிப்படையாகக் கொண்டு புதியதொரு உற்பத்தியை மேற்கொண்டார். இக் கருத்தினை மிகச் சரியாக எடுத்துக்காட்டும் இலத்திரனியல் வர்த்தக மாதிரி யாது?
(1) B2B (2) B2C (3) C2C (4) G2C (5) C2B (......)

19. XYZ கம்பனியின் நிலையான செலவு ரூபா 60 000 ஆகும். பொருள் A இன் ஓரலகு உற்பத்திக்கான மாறும்செலவு ரூபா 1.00 ஆகும். இப்பொருளினது அலகொன்றின் விற்பனை விலை ரூபா 3.00 எனின், இலாபமாக ரூபா 50 000 இனைப் பெற்றுக்கொள்வதற்காக உற்பத்தி செய்யப்பட வேண்டிய மொத்த அலகுகளின் எண்ணிக்கை யாது?
(1) 20 000 (2) 30 000 (3) 40 000 (4) 50 000 (5) 55 000 (......)

[ பக் 4 ஐப் பார்க்க

**20.** கடன் அட்டையுடன் ஒப்பிடும்போது வரவு அட்டையின் பயன்பாட்டினால் கிடைக்கப்பெறும் நன்மையாவது,
(1) பணத்தை பௌதிகரீதியாகக் கொண்டுசெல்லத் தேவையில்லை
(2) காலங்கடந்து செலுத்தக்கூடியதாயிருத்தல்
(3) அட்டை உரிமையாளர் கடன்படுநராகத் தேவையில்லை
(4) பணக் கொடுப்பனவுகளை மேற்கொள்வதற்காக அட்டைகளைச் சமர்ப்பிக்க வேண்டுமாயிருத்தல்
(5) கணக்கில் பணமில்லாத போதிலும்கூட பொருட்களைக் கொள்வனவு செய்யக்கூடியதாயிருத்தல் (……)

**21.** பின்வரும் அட்டவணை சீதா என்பவர் தனது யோகட் உற்பத்தியின் தரத்தைப் பேணுவதற்காகப் பின்பற்றிய தரக்கட்டுப்பாட்டு நுட்பமுறைகள், செயற்பாடுகள் ஆகியவற்றுள் சிலவற்றைக் காட்டுகின்றது.

| தரக்கட்டுப்பாட்டு நுட்பமுறைகள் | செயற்பாடுகள் |
|---|---|
| (i) தர உறுதி | A - வழக்கமாக உற்பத்தி தொடர்பான பிரச்சினைகள் பற்றிக் கலந்துரையாடுவதற்காக ஊழியர் குழுக்களை அமைத்தல் |
| (ii) தரவட்டங்கள் | B - உற்பத்திச் செயன்முறையின் அனைத்து மட்டங்களினதும் தரத்தினை அடிக்கடி மேற்பார்வை செய்தல் |
| (iii) பூச்சிய வழு | C - உற்பத்தியின்போது எப்பொழுதும் சரியான மூலப்பொருட்களைப் பயன்படுத்துதல் |
| (iv) தரநியமம் | D - நிறுவனத்தின் செயன்முறைகள் அனைத்திலும் தரத்தினை உறுதிப்படுத்துதல் |
| (v) மொத்த தர முகாமைத்துவம் | E - எவ்வேளையிலும் உற்பத்தியை 100% தரமுடையதாகப் பேணுவதற்குத் தொடர்ச்சியான முயற்சிகளை மேற்கொள்ளல் |

மேற்குறித்த தரக்கட்டுப்பாட்டு நுட்பமுறைகளின் ஒழுங்கிற்கமைய உரிய செயற்பாடுகளைச் சரியாகக் கொண்டுள்ள தெரிவு யாது?
(1) A, B, E, D, C (2) A, C, B, D, E (3) B, A, E, C, D
(4) B, C, D, E, A (5) E, B, C, D, A (……)

**22.** வணிகரொருவர் தன்னால் இயன்றளவு குறைந்த கிரயத்தில் பொருட்களை உற்பத்தி செய்து அவற்றைச் சந்தையில் தாராளமாகக் கிடைப்பதற்கு மேற்கொள்ளும் முயற்சியை எவ்வெண்ணக்கரு மிகச்சரியாகப் பிரதிபலிக்கின்றது?
(1) சந்தைப்படுத்தல் எண்ணக்கரு (2) சமூகம் சார்ந்த சந்தைப்படுத்தல் எண்ணக்கரு
(3) விற்பனை எண்ணக்கரு (4) உற்பத்திப்பொருள் எண்ணக்கரு
(5) உற்பத்தி எண்ணக்கரு (……)

**23.** உற்பத்திப் பொருளொன்றுக்கான நுகர்வோர் பெறுமான படிநிலையுடன் தொடர்புடைய கூறுகள் கீழே தரப்பட்டுள்ளன.

A - மூல (மைய) நன்மைகள் B - விருத்திசெய்யப்பட்ட (மேம்படுத்தப்பட்ட) உற்பத்திகள்
C - அடிப்படை உற்பத்திகள் D - எதிர்பார்க்கும் உற்பத்திகள்
E - சாத்தியம்மிக்க உற்பத்திகள்

மேற்குறித்த வாடிக்கையாளர் பெறுமான படிநிலையினை சரியான ஒழுங்குமுறையில் எடுத்துக்காட்டும் தெரிவு யாது?
(1) A, B, D, C, E (2) A, C, D, B, E (3) B, A, E, C, D
(4) B, E, A, C, D (5) C, A, B, D, E (……)

**24.** விசேட பொருள் ஒன்றைக் கொள்வனவு செய்யும்போது நுகர்வோரில் தாக்கம் செலுத்தும் காரணியைத் தெரிவுசெய்க.
(1) சந்தைப்படுத்துனர்கள்
(2) விற்பனை மேம்படுத்தல்
(3) பண்டக்குறி விசுவாசம்
(4) பொருட்கள் தாராளமாக கிடைக்கக்கூடிய தன்மை
(5) விலை (……)

**25.** மனிதவளத் திட்டமிடற் செயன்முறையின் முதலாவது படிமுறை யாது?
(1) தொழில் விபரங்களையும் தொழில் நியமங்களையும் அறிந்துகொள்ளல்
(2) மனிதவளக் கேள்வி தொடர்பாக எதிர்வுகூறல்
(3) மனிதவள நிரம்பல் தொடர்பாக எதிர்வுகூறல்
(4) பதவியுயர்வுகளினூடாக நிரப்பப்படக்கூடிய வெற்றிடங்களின் எண்ணிக்கையை மதிப்பிடுதல்
(5) ஓய்வுபெறவுள்ள ஊழியர்களின் எண்ணிக்கையை மதிப்பிடுதல் (……)

**26.** பின்வருவன முகாமையாளர் ஒருவரால் எடுக்கப்பட்ட சில தீர்மானங்களாகும்.

A - வியாபாரக் கடன்கொடுத்தோர் தொடர்பான தீர்மானங்கள்
B - காசு முகாமைத்துவம் தொடர்பான தீர்மானங்கள்
C - செலுத்தப்பட வேண்டிய செலவுகள் தொடர்பான தீர்மானங்கள்
D - வியாபாரக் கடன்பட்டோர் தொடர்பான தீர்மானங்கள்
E - வியாபார சரக்கிருப்பு தொடர்பான தீர்மானங்கள்
F - வங்கி மேலதிகப்பற்று தொடர்பான தீர்மானங்கள்

மேற்குறித்தவற்றுள் குறுங்கால முதலீட்டுத் தீர்மானங்களை மாத்திரம் கொண்ட தெரிவு யாது?

(1) A, B, E (2) A, C, F (3) B, C, F (4) B, D, E (5) C, D, E (……)

**27.** பின்வரும் அட்டவணையில் தகவல் முறைமைகளின் வகைகளும் அவற்றுக்கான உதாரணங்களும் தரப்பட்டுள்ளன.

| தகவல் முறைமைகளின் வகைகள் | உதாரணங்கள் |
|---|---|
| (i) பரிவர்த்தனை செயலாக்க முறைமை (TPS) | A - எதிர்வுகூறல் அறிக்கைகளை வழங்குதல் |
| (ii) அலுவலக தன்னியக்க முறைமை (OAS) | B - நாளாந்த இருப்புமட்ட அறிக்கைகளை வழங்குதல் |
| (iii) முகாமைத்துவ தகவல் முறைமை (MIS) | C - மின்னஞ்சல் வசதிகளை வழங்குதல் |
| (iv) தீர்மான உதவி முறைமை (DSS) | D - சம்பள அறிக்கைகளைத் தயாரித்தல் |
| (v) நிறைவேற்று உதவி முறைமை (ESS) | E - முதலீட்டு மதிப்பீட்டு அறிக்கைகளை வழங்குதல் |

மேற்குறித்த தகவல் முறைமை வகைகளின் வரிசைக்கு அமைவாக உதாரணங்கள் சரியாகப் பொருந்தும் தெரிவு யாது?

(1) B, C, E, D, A (2) C, D, E, A, B (3) D, C, B, E, A
(4) D, E, A, B, C (5) E, A, B, C, D (……)

**28.** பின்வரும் அட்டவணையில் சில கணினி வலையமைப்பு வகைகளும் அவற்றுக்கான விபரணங்களும் தரப்பட்டுள்ளன.

| கணினி வலையமைப்பு வகைகள் | விபரணங்கள் |
|---|---|
| (i) மர வலையமைப்பு | A - சகல கணினிகளும் பொதுவானதொரு வடத்துடன் நேரடியாக இணைக்கப்பட்டிருத்தல் |
| (ii) கலப்பு வலையமைப்பு | B - ஒவ்வொரு கணினியும் மேலும் இரண்டு கணினிகளுடன் இணைக்கப்பட்டிருத்தல் |
| (iii) பாட்டை வலையமைப்பு | C - மத்திய கணினியொன்றுடன் ஏனைய கணினிகள் இணைக்கப்பட்டிருத்தல் |
| (iv) நட்சத்திர வலையமைப்பு | D - மரமொன்றின் கிளைகளைப்போன்று கணினிகள் மத்திய கணினியுடன் இணைக்கப்பட்டிருத்தல் |
| (v) வளைய வலையமைப்பு | E - வெவ்வேறான இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட கணினி வலையமைப்புக்கள் ஒன்றுடனொன்று இணைக்கப்பட்டிருத்தல் |

மேற்குறித்த கணினி வலையமைப்பு வகைகளுக்கமைய அவற்றிற்குரிய விபரணங்கள் சரியாக ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள தெரிவு யாது?

(1) C, D, A, E, B (2) C, E, D, A, B (3) D, B, C, A, E
(4) D, B, C, E, A (5) D, E, A, C, B (……)

**29.** இணைய சேவை வழங்கி **அல்லாதது** எது?

(1) செயற்கைக்கோள் தொழில்நுட்பம் (2) இணையத்தள சேவைகள் (3) மின்னஞ்சல்
(4) தொடர்பாடல் சேவைகள் (5) காணொளி மாநாடுகள் (……)

**30.** வணிகத் திட்டம் தொடர்பிலான வழிகாட்டலை வழங்குவதற்காகத் தயாரிக்கப்படும் சுருக்கம்

(1) நிறைவேற்றுச் சுருக்கம் ஆகும். (2) கிரயச் சுருக்கம் ஆகும்.
(3) காசுப்பாய்ச்சல் சுருக்கம் ஆகும். (4) வருமானச் சுருக்கம் ஆகும்.
(5) கடன் தொடர்பான சுருக்கம் ஆகும். (……)

[ பக் 6 ஐப் பார்க்க

● **31** தொடக்கம் **40** வரையான வினாக்களிலுள்ள இடைவெளிகளை **பொருத்தமான சொல்/சொற்களைப்** பயன்படுத்தி நிரப்புக.

**31.** (அ) இலாபத்தினை நோக்கமாகக் கொண்ட போதிலும் பதிவுசெய்தல் **அவசியமற்ற** இரண்டு வணிக அமைப்புகளாவன .................................... , .................................... ஆகியனவாகும்.

(ஆ) பொதுவாக முயற்சியாளரொருவர் .................................... நோக்கமாகக் கொண்டு வணிகத்தை ஆரம்பிப்பதுடன், சமூகரீதியான முயற்சியாளரொருவர் .................................... நோக்கமாகக் கொண்டு வணிகத்தை ஆரம்பிப்பார்.

**32.** (அ) முகாமைத்துவத்தில் சரியானதைச் செய்தல் .................................... எனப்படுவதுடன், செய்யவேண்டியதைச் சரியாகச் செய்தல் .................................... எனப்படும்.

(ஆ) மின்ட்ஸ்பேர்க்கின் வகிபாகப் பகுப்பியலுக்கமைய முகாமையாளர் ஒருவரால் புதிய செயற்றிட்டங்கள் அறிமுகப்படுத்தப்படுதல் .................................... வகிபாகத்தின் .................................... உப வகிபாகத்திற்குரியதாகும்.

**33.** (அ) இருப்புக் கட்டுப்பாட்டின் முதன்மையான நோக்கம் .................................... இருப்பு மட்டத்தைப் பேணுதலும், இருப்பு .................................... கிரயத்தைக் குறைப்பதுமாகும்.

(ஆ) ஊழிய உள்ளீட்டிற்கும் .................................... இடையிலான தொடர்பானது .................................... உற்பத்தித்திறன் எனப்படும்.

**34.** (அ) காசுப்பாய்ச்சற் கூற்றில் உள்ளடங்கியுள்ள செயற்பாடுகளை பிரதானமாக .................................... , .................................... என வகைப்படுத்தலாம்.

(ஆ) நீண்டகால நிதியியல் தீர்மானங்களை .................................... கட்டமைப்பு, .................................... தொடர்பிலான தீர்மானங்கள் என வகைப்படுத்தலாம்.

**35.** (அ) அரசாங்கத்தினால் மேற்கொள்ளப்படும் கடன்களுக்கான வட்டிக் கொடுப்பனவானது .................................... செலவாக அமைகின்ற அதேவேளை, வைத்தியசாலையொன்றினை நிர்மாணித்தல் .................................... செலவாகும்.

(ஆ) இறக்குமதிப் பண்ட அலகொன்றின் மீது விதிக்கப்படும் நிலையான வரியானது .................................... தீர்வை எனப்படுவதுடன், பண்டத்தின் பெறுமதியின் அடிப்படையில் அறவிடப்படுவது .................................... தீர்வையாகும்.

**36.** (அ) தொழில்நுட்பத் திறன்கள் .................................... முகாமையாளர்களுக்கு மிக முக்கியமாகத் தேவைப்படுவதுடன், .................................... திறன்கள் அனைத்து மட்ட முகாமையாளர்களுக்கும் சமவளவில் முக்கியமானவையாகும்.

(ஆ) ஊழியர்களுக்கிடையே .................................... , .................................... ஆகியவற்றை முறையான விதத்தில் கையளிக்கும் செயன்முறை அதிகாரப்பகிர்வு எனப்படும்.

**37.** (அ) அங்கீகாரம் பெற்ற வியாபாரியினால் மொத்த .................................... பெறுமதியின் சதவீதமாக அங்கீகாரம் வழங்கும் வியாபாரிக்குச் செலுத்தப்பட வேண்டியது .................................... ஆகும்.

(ஆ) சுங்கக் களஞ்சியசாலைகளில் இறக்குமதி செய்யப்பட்ட பொருட்களுக்குப் பெறுமதி சேர்க்கப்பட்ட பின்னர் ஏற்றுமதி செய்யப்படுதல் .................................... வர்த்தகம் என்பதுடன், இறக்குமதி செய்யப்பட்ட உபகரணங்களின் பயன்பாட்டின் பின்னர் மீண்டும் அதே நாட்டிற்குத் திருப்பியனுப்புதல் .................................... ஏற்றுமதியாகும்.

**38.** (அ) உற்பத்தி செய்யப்படுகின்ற அலகுகளின் எண்ணிக்கைக்கு ஏற்ப வேறுபடுவது .................................... கிரயமாவதுடன், குறித்தளவு உற்பத்தி அலகுகளின் எண்ணிக்கை வரையில் மாறாதிருப்பது .................................... கிரயமாகும்.

(ஆ) வணிகத் திட்டமொன்றினூடாக வணிகத்தின் .................................... அவற்றை அடைந்து கொள்வதற்குப் பயன்படுத்தப்பட வேண்டிய .................................... விபரிக்கப்படுகின்றன.

[ பக் 7 ஐப் பார்க்க

**39.** (அ) உற்பத்தியாளர் ஒருவர் குறித்தவொரு பண்டக்குறியில் பல பொருட்களை முன்வைத்தல் .......................... பண்டக்குறி எனப்படுவதுடன், குறித்தவொரு வர்த்தகருக்காக உருவாக்கப்படும் பண்டக்குறி .................... பண்டக்குறி எனப்படும்.

(ஆ) இலக்கை அடைவதற்காக விலையை நிர்ணயிக்கும்போது ................................ அடிப்படையாய் அமையும் அதேவேளை, நடைமுறை விலையின்படி விலையினைத் தீர்மானிப்பதில் ........................ அடிப்படையாய் அமையும்.

**40.** (அ) சர்வதேச வர்த்தகத்தின்போது கொடுப்பனவுகளை மேற்கொள்வதற்காக வங்கி ........................ , ............................ கடிதம் ஆகியவற்றைப் பயன்படுத்தலாம்.

(ஆ) பொதியிடலின் பிரதான நோக்கம் பண்டங்களின் ............................ இருந்தபோதிலும் தற்காலத்தில் அது .................................. கருவியாகவும் பயன்படுத்தப்படுகின்றது.

- **41** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்களுக்கு **மிகப் பொருத்தமான விடைகளை** எழுதுக.

**41.** தனியுடைமை வணிகமொன்றின் அனுகூலங்கள், பிரதிகூலங்கள் **இரண்டு** வீதம் எழுதுக.

| **அனுகூலங்கள்** | **பிரதிகூலங்கள்** |
|---|---|
| 1. | 1. |
| 2. | 2. |

**42.** இருப்புக் கட்டுப்பாட்டுடன் தொடர்புடைய பின்வரும் சமன்பாட்டிலுள்ள எழுத்துக்களின் மூலமாகக் கருதப்படுவன யாவை?

$$EOQ = \sqrt{\frac{2cd}{h}}$$

1. $EOQ$ : ..................................................
2. $c$ : ..................................................
3. $d$ : ..................................................
4. $h$ : ..................................................

**43.** புதிதாக ஊழியர் ஒருவரைத் தெரிவுசெய்யும்போது நிறுவனமொன்று பயன்படுத்தக்கூடிய பின்புலச் சோதனை வகைகள் **நான்கினைக்** குறிப்பிடுக.

1. ..................................................
2. ..................................................
3. ..................................................
4. ..................................................

**44.** பின்வரும் ஒவ்வொரு செயற்பாட்டிற்கும் பொருத்தமான மனிதவள முகாமைத்துவத் தொழிற்பாட்டினை எழுதுக.

1. தொழில் விபரத்தையும் தொழில் நியமத்தையும் தயாரிப்பதற்குத் தேவையான தகவல்களைச் சேகரித்தல் : ..................................
2. புதிய ஊழியர்களுக்கு நிறுவனம் தொடர்பான காணொளி ஒன்றினைக் காட்சிப்படுத்துதல் : ..................................
3. மனிதவள கேள்வி, நிரம்பல் ஆகியன தொடர்பாக எதிர்வுகூறல் : ..................................
4. ஊழியர்களின் தேர்ச்சிகளை விருத்திசெய்வதற்கான நிகழ்ச்சித்திட்டங்களை நடாத்துதல் : ..................................

**45.** நிதித் திட்டமொன்றில் உள்ளடங்க வேண்டிய பிரதான கூறுகள் **நான்கினைக்** குறிப்பிடுக.

1. ............................ 2. ............................

3. ............................ 4. ............................

[ பக் 8 ஐப் பார்க்க

**46.** வணிக நடவடிக்கைகளில் ஈடுபடுதற்கு இலங்கை பிணையங்கள் பரிமாற்று ஆணைகுழுவிடமிருந்து அனுமதிப்பத்திரத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டிய நிறுவனங்கள் **நான்கினைப்** பெயரிடுக.

1. ......................................................................................................
2. ......................................................................................................
3. ......................................................................................................
4. ......................................................................................................

**47.** இணையத்தினூடாக வணிகரொருவர் பெற்றுக் கொள்ளத்தக்க அனுகூலங்கள் **நான்கினை** எழுதுக.

1. ......................................................................................................
2. ......................................................................................................
3. ......................................................................................................
4. ......................................................................................................

**48.** இலத்திரனியல் தகவல் முறைமை ஒன்றில் காணப்படும் வன்பொருட்களுக்கான உதாரணங்கள் **நான்கினைத்** தருக.

1. ......................................................................................................
2. ......................................................................................................
3. ......................................................................................................
4. ......................................................................................................

**49.** இலாபத் தன்மை விகிதங்கள் **நான்கினைக்** குறிப்பிடுக.

1. ......................................................................................................
2. ......................................................................................................
3. ......................................................................................................
4. ......................................................................................................

**50.** பின்வரும் ஒவ்வொரு குறியீட்டினதும் கருத்தினை எழுதுக.

1. ......................................................................................................
2. ......................................................................................................
3. ......................................................................................................
4. ......................................................................................................

* * *


Department of Examinations Sri Lanka

පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ව්‍යාපාර අධ්‍යයනය II
வணிகக் கல்வி II
Business Studies II

32 T II

13.08.2019 / 1300 - 1610

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து வினாக்களைத் தெரிவு செய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**அறிவுறுத்தல்கள்:**

* ஒவ்வொரு பகுதியில் இருந்தும் ஆகக் குறைந்தது **இரண்டு** வினாக்களையேனும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

1. (i) (அ) உற்பத்தியொன்றிற்கான கேள்வியினை உருவாக்குவதில் தாக்கம் செலுத்தக்கூடிய காரணிகள் **நான்கினைக்** குறிப்பிடுக.
   (ஆ) முகாமையாளரொருவர் போட்டி நிறுவனங்களின் மீது அக்கறை செலுத்துவதற்கான காரணங்கள் **இரண்டினை** விளக்குக. (04 புள்ளிகள்)
   (ii) புதிதாக நிர்மாணிக்கப்பட்ட பாரிய கடைத்தொகுதி ஒன்றினூடாக பிரதேச மக்களுக்குக் கிடைக்கக்கூடிய அனுகூலங்கள் **இரண்டினையும்** பிரதிகூலங்கள் **இரண்டினையும்** விபரிக்குக. (04 புள்ளிகள்)
   (iii) தொழிற்பாட்டுரீதியான நிறுவனம்சார் கட்டமைப்பு என்பது யாதென விளக்குவதுடன், அதன் அனுகூலங்கள் **இரண்டினையும்** பிரதிகூலங்கள் **இரண்டினையும்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)
   (iv) (அ) SWOT பகுப்பாய்வொன்றினூடாக வணிகரொருவர் பெற்றுக்கொள்ளக்கூடிய அனுகூலங்கள் **நான்கினைத்** தருக.
   (ஆ) இலங்கையின் இயற்கை வளங்களைப் பயன்படுத்தி வணிக நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்காக அரசின் அனுமதிப்பத்திரத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டிய வணிகங்கள் **நான்கினைப்** பெயரிடுக. (04 புள்ளிகள்)
   (v) (அ) சமூகப் பொறுப்புக்களை நிறைவேற்றுவதனூடாக வணிகமொன்று பெற்றுக் கொள்ளத்தக்க அனுகூலங்கள் **நான்கினைக்** குறிப்பிடுக.
   (ஆ) வணிக நிறுவனமொன்று தமது வாடிக்கையாளர்களுக்காக நிறைவேற்ற வேண்டிய சமூகப் பொறுப்புக்கள் **இரண்டினைச்** சுருக்கமாக விபரிக்குக. (04 புள்ளிகள்)
   (மொத்தம் 20 புள்ளிகள்)

2. (i) (அ) தனியார்துறை வணிக நடவடிக்கைகளை மேம்படுத்தும்பொருட்டு இலங்கை அரசாங்கத்தினால் மேற்கொள்ளப்படுகின்ற நடவடிக்கைகள் **நான்கினைக்** குறிப்பிடுக.
   (ஆ) நேர்வரிக்கும் நேரில்வரிக்கும் இடையிலான வேறுபாடுகள் **இரண்டைக்** குறிப்பிட்டு, அவ் ஒவ்வொரு வரி வகைக்கும் ஒவ்வோர் உதாரணம் தருக. (04 புள்ளிகள்)
   (ii) (அ) இலங்கை தர (கட்டளைகள்) நிறுவகத்திடமிருந்து சிறிய மற்றும் நடுத்தர அளவு நிறுவனங்கள் பெற்றுக்கொள்ளக்கூடிய சேவைகள் **நான்கினைக்** குறிப்பிடுக.
   (ஆ) இலங்கை மத்திய வங்கியால் நிதிக் கொள்கைகளை நடைமுறைப்படுத்துவதற்காகப் பயன்படுத்தப்படும் கொள்கை வட்டி வீதங்கள் **இரண்டினை** விபரிக்குக. (04 புள்ளிகள்)
   (iii) சர்வதேசரீதியில் அங்கீகரிக்கப்பட்ட நுகர்வோர் பொறுப்புக்கள் **நான்கினைக்** குறிப்பிட்டு, அவற்றை விளக்குக. (04 புள்ளிகள்)

[பக். 2 ஐப் பார்க்க

(iv) முறைசார்ந்த வணிக நிறுவனமொன்றை முறைசாராத வணிக நிறுவனத்திலிருந்து வேறுபடுத்தி இனங்காணத்தக்க குணாம்சங்கள் **நான்கினை** விபரிக்குக. (04 புள்ளிகள்)

(v) (அ) இலங்கை அரசாங்கம் வணிக நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்கான காரணங்கள் **இரண்டினை** உதாரணங்களுடன் விளக்குக.

(ஆ) அரச நிறுவனங்கள் தனியார் மயப்படுத்தப்படுவதனால் பொதுமக்களுக்குக் கிடைக்கக்கூடிய அனுகூலங்கள் **இரண்டினையும்** பிரதிகூலங்கள் **இரண்டினையும்** தருக. (04 புள்ளிகள்)

(மொத்தம் 20 புள்ளிகள்)

3. (i) "இலங்கையில் பெண் முயற்சியாளர்களின் எண்ணிக்கை மிகக் குறைவாகும்." முயற்சியாண்மையில் பெண்களின் பங்களிப்பினை விருத்தி செய்வதற்கு மேற்கொள்ளத்தக்க நடவடிக்கைகள் **நான்கினை** விபரிக்குக. (04 புள்ளிகள்)

(ii) சியாமளா என்பவர் தமது பிரதேசத்தில் தாராளமாகக் கிடைக்கக்கூடிய வாழை நாரிழைகளைக் கொண்டு பெண்களுக்கான கைப்பைகள், தொப்பி, வேறு அலங்காரப் பொருட்கள் ஆகியவற்றை உற்பத்தி செய்யக்கூடிய நிறுவனமொன்றை ரூபா 50 000 முதலிட்டுத் தொடங்கியதுடன், அப்பிரதேசத்தில் வசிக்கும் வேலைவாய்ப்பற்ற பெண்கள் மூவரைத் தெரிவுசெய்து இவ்வுற்பத்திகள் தொடர்பான பயிற்சிகளை வழங்கி நாளொன்றிற்கு ரூபா 800 இனைக் கொடுப்பனவாகச் செலுத்தும் அடிப்படையில் சேவையில் ஈடுபடுத்திக் கொண்டார். அத்துடன் தனது உற்பத்திகளை உல்லாசப்பயண ஹோட்டல்களில் சந்தைப்படுத்துவதற்கான நடவடிக்கைகளையும் மேற்கொண்டுள்ளார். இவ்விடய ஆய்வில் காணப்படும் சமூக, பொருளாதார நன்மைகளைத் தருக. (04 புள்ளிகள்)

(iii) (அ) விரைவுத் துலங்கல் குறியீட்டைப் (Quick Response Code) பயன்படுத்துவதன் மூலம் வணிகரொருவர் பெற்றுக்கொள்ளத்தக்க அனுகூலங்கள் **இரண்டினைக்** குறிப்பிடுக.

(ஆ) இலத்திரனியல் பணப்பையைப் (e-wallet) பயன்படுத்தி செல்லிடத் தொலைபேசியினூடாகக் கொடுப்பனவை மேற்கொள்வதற்காக நபரொருவர் பூர்த்தி செய்திருக்க வேண்டிய அடிப்படைத் தேவைப்பாடுகள் **இரண்டினைத்** தருக. (04 புள்ளிகள்)

(iv) (அ) வாடிக்கையாளர்களுக்கு வர்த்தக வங்கிகளால் வழங்கப்படுகின்ற கடன்களை காலத்தின் அடிப்படையில் வகைப்படுத்தக்கூடிய முறைகள் **இரண்டினை** உதாரணங்களுடன் விபரிக்குக.

(ஆ) இலங்கையின் சுயதொழில் மேம்பாட்டுக் கடன் திட்டத்தின் (SEPI) நோக்கங்களைச் சுருக்கமாக விளக்குக. (04 புள்ளிகள்)

(v) (அ) இலங்கை காப்புறுதி ஒழுங்குபடுத்தல் ஆணைக்குழுவின் தொழிற்பாடுகள் **நான்கினைக்** குறிப்பிடுக.

(ஆ) மீள் காப்புறுதியின் மூலம் காப்பீடு அளிப்போருக்கும் காப்பீடு பெறுவோருக்கும் கிடைக்கும் நன்மைகள் **இரண்டு** வீதம் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(மொத்தம் 20 புள்ளிகள்)

4. (i) இலங்கை புகையிரத போக்குவரத்துச் சேவையில் காணப்படும் பலவீனங்கள் **நான்கினைக்** குறிப்பிட்டு, அவ்வொவ்வொரு பலவீனத்தையும் நிவர்த்தி செய்வதற்கான தீர்வுகளையும் முன்வைக்குக. (04 புள்ளிகள்)

(ii) (அ) வணிக நடவடிக்கைகளில் தொடர்பாடல் முக்கியத்துவமானதாய் அமையும் வழிகள் **இரண்டினைக்** குறிப்பிடுக.

(ஆ) செய்தியொன்று வாய்மொழிமூலமான தொடர்பாடலின்போது சிதைவடைவதற்கான காரணங்கள் **இரண்டினைத்** தருக. (04 புள்ளிகள்)

(iii) (அ) இலத்திரனியல் தொடர்பாடலின் மூலமாக வணிகர் ஒருவர் பெற்றுக்கொள்ளக்கூடிய அனுகூலங்கள் **நான்கினைக்** குறிப்பிடுக.

(ஆ) உள்நாட்டு வர்த்தகத்தின் **இரண்டு** பிரதான வகைகளையும் குறிப்பிட்டு, அவற்றுக்கிடையிலான வேறுபாடுகளைச் சுருக்கமாக விபரிக்குக. (04 புள்ளிகள்)

(iv) "இலங்கையில் தற்போது சுயசேவை வணிகம் பிரபல்யமடைந்து வருகின்றது." இவ்வணிகத்தினால் வணிகருக்கும் வாடிக்கையாளர்களுக்கும் கிடைக்கும் அனுகூலங்கள், பிரதிகூலங்கள் **இரண்டு** வீதம் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

[பக். 3 ஐப் பார்க்க


Department of Examinations Sri Lanka

(v) (அ) சர்வதேச வர்த்தகத்தில் பயன்படுத்தப்படும் தீர்வையற்ற தடைகள் **இரண்டினை** விபரிக்குக.

(ஆ) இழப்பீட்டுக் காப்புறுதிக் கடிதமொன்று வழங்கப்படுவதற்கான நோக்கத்தை விளக்குக. (04 புள்ளிகள்)

(மொத்தம் 20 புள்ளிகள்)

## பகுதி II

**5.** (i) (அ) இருப்புக் கட்டுப்பாடு தொடர்பில் பயன்படுத்தப்படுகின்ற 'ABC பகுப்பாய்வு' என்பதனை விபரிக்குக.

(ஆ) பண்டமொன்றின் தரத்தை நிர்ணயம் செய்யும்போது உற்பத்தியாளராலும் நுகர்வோராலும் கருத்திற்கொள்ளப்படும் காரணிகள் **இரண்டு** வீதம் சுருக்கமாக விபரிக்குக. (04 புள்ளிகள்)

(ii) இனிப்புப் பண்டங்களை உற்பத்தி செய்து விநியோகம் செய்யும் அமலா என்பவர் தமது உற்பத்திக்குப் பொருத்தமான பண்டக்குறி ஒன்றினை உருவாக்க எதிர்பார்த்துள்ளார். இதன்போது அவரால் கருத்திற்கொள்ளப்பட வேண்டிய குணாம்சங்கள் **நான்கினைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) (அ) மேம்படுத்தல் முறையொன்றாகத் தனிப்பட்ட விற்பனை மிகவும் பொருத்தமானதாக அமையும் சந்தர்ப்பங்கள் **நான்கினைக்** குறிப்பிடுக.

(ஆ) குளிரூட்டப்பட்ட உணவுகளை விநியோகிப்பதற்கான முறையொன்றைத் தெரிவுசெய்யும்போது கருத்திற்கொள்ளப்பட வேண்டிய காரணிகள் **நான்கினைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iv) நிகழ்நிலை (online) கொள்வனவு முறையின் மூலம் நுகர்வோருக்குக் கிடைக்கும் **இரண்டு** அனுகூலங்களையும் **இரண்டு** வரையறைகளையும் விபரிக்குக. (04 புள்ளிகள்)

(v) (அ) காசுப் பாதீட்டினைத் தயாரிப்பதன் மூலம் கிடைக்கக்கூடிய அனுகூலங்கள் **இரண்டினை** விபரிக்குக.

(ஆ) "குறுங்கால நிதி மூலங்களினூடாகப் பெற்றுக்கொள்ளப்படும் நிதியினை நீண்டகால முதலீட்டில் ஈடுபடுத்துதல் வணிகமொன்றுக்குப் பிரதிகூலமானதாக அமையலாம்." அவ்வாறு இடம்பெறுவதற்கான காரணங்கள் **இரண்டினை** விளக்குக. (04 புள்ளிகள்)

(மொத்தம் 20 புள்ளிகள்)

**6.** (i) பிரச்சினையொன்றிற்கான தீர்வுகளை வழங்கும்போது பல்வேறு மாற்றுவழிகளை மதிப்பிட்ட பின்னர் சிறந்த மாற்றுவழியினை நடைமுறைப்படுத்த வேண்டும். நடைமுறைப்படுத்தல் படிநிலையில் உள்ளடக்கப்படவேண்டிய செயற்பாடுகள் **நான்கினை** விளக்குக. (04 புள்ளிகள்)

(ii) நிறுவனமொன்றின் அமைப்பு வரைபடத்தின் ஒரு பகுதி கீழே காட்டப்பட்டுள்ளது.




(அ) 'கட்டுப்பாட்டு விசாலம்' என்பதனை விளக்குவதுடன், மேலே தரப்பட்டுள்ள அமைப்பு வரைபடத்தைப் பயன்படுத்தி சந்தைப்படுத்தல் முகாமையாளரின் கட்டுப்பாட்டு விசாலத்தின் அளவைக் குறிப்பிடுக.

(ஆ) மேலே காட்டப்பட்டுள்ள நிறுவனத்தின் திணைக்களப்படுத்தல் அடிப்படையினை இனங்கண்டு, அதன் அனுகூலங்கள் **இரண்டினைத்** தருக. (04 புள்ளிகள்)

[பக். 4 ஐப் பார்க்க

(iii) (அ) நிதிசாராத ஊக்குவிப்பு முறைகள் **நான்கினைக்** குறிப்பிடுக.
(ஆ) ஜனநாயக தலைமைத்துவப் பாணியின் சாதகமான பண்புகள் **இரண்டினையும்** பாதகமான பண்புகள் **இரண்டினையும்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iv) (அ) 'சமகால கட்டுப்பாடு', 'பின்னூட்டல் கட்டுப்பாடு' ஆகியவற்றினால் கருதப்படுவன யாவையென விளக்குக.
(ஆ) வணிக நிறுவனமொன்றிற்கு ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்தி முக்கியமானதாய் அமைவதற்கான காரணங்கள் **நான்கினைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(v) "மோட்டார் வாகன உற்பத்தியில் பாய்ச்சல் உற்பத்தி முறை அதிகளவில் பயன்படுத்தப்படுகின்றது." இம்முறையானது மோட்டார் வாகன உற்பத்திக்குப் பயன்படுத்தப்படுவதனால் கிடைக்கப்பெறும் அனுகூலங்கள் **நான்கினை** விளக்குக. (04 புள்ளிகள்)

(மொத்தம் 20 புள்ளிகள்)

**7.** (i) (அ) 'ஆரம்ப பொது வழங்கல்' (IPO) என்பதனால் கருதப்படுவது யாது?
(ஆ) அரச பிணைகளில் முதலிடுவதனூடாக முதலீட்டாளர் ஒருவருக்குக் கிடைக்கும் அனுகூலங்கள் **இரண்டினை** விபரிக்குக. (04 புள்ளிகள்)

(ii) கொழும்பு பங்குப் பரிவர்த்தனையில் கொடுக்கல் வாங்கல்களில் ஈடுபடுத்தப்படும் பிணைப்பத்திர வகைகள் **நான்கினைப்** பெயரிட்டு, அவற்றைச் சுருக்கமாக விபரிக்குக. (04 புள்ளிகள்)

(iii) (அ) 'அனைத்துப் பங்குகள் விலைச்சுட்டி' என்றால் என்ன என்பதைச் சுருக்கமாக விளக்குக.
(ஆ) 'வேலை வடிவமைப்பு' என்பதால் கருதப்படுவது யாதென்பதனை விபரிக்குக. (04 புள்ளிகள்)

(iv) நிறுவனமொன்று சந்தைப்படுத்தல் உதவியாளர் ஒருவரை ஆட்சேர்ப்புச் செய்வதற்கு பத்திரிகை விளம்பரமொன்றைப் பிரசுரிக்கும் தீர்மானத்தை மேற்கொண்டது. பத்திரிகை விளம்பரமொன்றினூடான ஆட்சேர்ப்பின் அனுகூலங்கள் **இரண்டினையும்** பிரதிகூலங்கள் **இரண்டினையும்** விபரிக்குக. (04 புள்ளிகள்)

(v) (அ) "நேர்முகப் பரீட்சை முறையானது ஊழியர்களை தெரிவுசெய்வதற்காகப் பயன்படுத்தப்படும் பிரபல்யமானதொரு முறையாகும்." இம்முறையின் வரையறைகள் **இரண்டினை** விபரிக்குக.
(ஆ) 'ஊழியப் புரள்வு', 'ஊழிய வரவின்மை' ஆகியவற்றை ஒப்பிடுக. (04 புள்ளிகள்)

(மொத்தம் 20 புள்ளிகள்)

**8.** (i) தொடர்பாடல் தொழில்நுட்பத்தின் பரிணாம வளர்ச்சியினை பொருளாதார, சமூக அபிவிருத்தி யுகங்களுக்கேற்ப விபரிக்குக. (04 புள்ளிகள்)

(ii) (அ) தரவு, தகவல் ஆகியவற்றை ஒப்பிடுக.
(ஆ) 'அறிவுசார் ஊழியர்' என்பதனை விளக்குவதுடன், அவ்வகை ஊழியர்களுக்கு **இரண்டு** உதாரணங்கள் தருக. (04 புள்ளிகள்)

(iii) (அ) நிறுவனமொன்றிற்கு தகவல் முகாமைத்துவத்தின் முக்கியத்துவத்தைச் சுருக்கமாக விளக்குக.
(ஆ) வணிகர் ஒருவருக்கு வணிகத் திட்டமொன்று முக்கியமானதாக அமைவதற்கான காரணங்கள் **இரண்டினைச்** சுருக்கமாக விபரிக்குக. (04 புள்ளிகள்)

(iv) (அ) சந்தைப்படுத்தல் திட்டமொன்றில் உள்ளடக்கப்பட வேண்டிய அடிப்படைக் கூறுகளை விபரிக்குக.
(ஆ) போட்டிநிலைப் பகுப்பாய்வொன்றின்போது கவனத்திற் கொள்ளப்பட வேண்டிய காரணிகள் **நான்கினைத்** தருக. (04 புள்ளிகள்)

(v) செயற்றிட்ட மதிப்பீட்டுக் கிரயத்தில் உள்ளடக்கப்பட்டுள்ள 'செயற்பாட்டிற்கு முந்திய செலவு' என்பதனை விளக்குவதுடன், அதற்கான உதாரணங்கள் **இரண்டினைத்** தருக. (04 புள்ளிகள்)

(மொத்தம் 20 புள்ளிகள்)

* * *